सत्यमेव जयति

THE MESSENGER OF TRUTH

# சத்திய தூதன்.

Vol. III. No. 5.] MARCH, 1890. [Price 1 Pie Monthly.

## THE FUTURE STATE.

Men in every age and in every part of the world have a vague idea that death is not the end of their conscious existence. When contemplating death something whispers within them. "Death is not the end of all. The soul shall live in a world after death, where it shall reap the fruit of its deeds whether good or evil." Hence men in every stage of civilization believe in a Future state of rewards and punishments, in Heaven and Hell.

The old Rishis of the Vedas believed in a world beyond death containing both a place of bliss and a place of misery. They speak of the former as the celestial abode of Varuna and of Yama where the pitris or Fathers enjoy the society, and share in the pleasures, of the gods; and the latter as a great pit (*Karta*) into which the irreligious who offer no sacrifices are hurled.

The form which the doctrine of Future state assumes now in India is Transmigration of souls. According to this the soul of every man after leaving the body at death must be born again and again into the world in the shape of animals and vegetables, till the fruit of its works, whether good or evil, is fully reaped; and when the soul itself as a conscious existence is destroyed by absorption in Brahm, the only real substance. This is a terrible doctrine, a doctrine without a ray of sun-shine to the soul in its sorrows and aspirations. For what are its rewards? Only to be born into higher forms, but without the consciousness of the previous lower; and hence without the means of enjoying the pleasure of the higher forms *as the result* of good done in the lower. The happiness arising from the consciousness of having done one's duty in any given birth, which is the highest happiness imaginable, has no place in this doctrine! Indeed there is no hope of ever enjoying such happiness, for the soul no sooner expiates the cause of its Transmigration than it ceases to be conscious. Its punishments also are unmeaning and cruel, for the soul does not know the cause of its transmigration or even that it ever existed in any previous birth! Hence conscious suffering for having failed to do one's duty is foreign to this doctrine; and therefore it affords no rational incentive to do either good or evil. It is moreover a great degradation of the old Vedic doctrine.

Now, the doctrine of Future state occupies a prominent place in the teachings of Christ. He has ratified men's belief in a life after death, cleared away the mists which obscured it, and placed it before the world in its sublime nakedness. He taught authoritatively that the soul of every man shall live after death either in Heaven or in Hell. Those who serve God with all their heart shall go to

## மறுமை.

சகல தேசங்களிலும் சகல சமயங்களிலுமுள்ள மனிதர்களுக்குத் தாங்கள் செத்தாலும் ஜீவித்திருப்பார்கள் என்னும் ஒரு விதமான எண்ணமுண்டு. மரணத்தை நினைக்கும்பொழுது உள்ளமானது "மரணம் உன் முடிவல்ல. மரணத்துக்குப் பின்பும் ஆத்துமா ஒருபக்கத்தில் ஜீவித்திருந்து, நல்லதும் தீயதுமான அதின் செய்கைகளின் பலனை அநுபவித்துக்கொண்டிருக்கும்" என்று மெல்லென உரைக்கும். ஆகையினால் தான் எந்தெந்த ஸ்திதியில் இருப்பவர்களும் பலாபலன்கள் முறையே கிடைக்கச்செய்கிற மோட்ச நரகங்களாகிய மறுமை உண்டென்று நம்பியிருக்கிறார்கள்.

சதுர்வேதத்திற் சொல்லியிருக்கிற பூர்வரிஷிகள் மரணத்துக்குப் பின்பு மறுமை உண்டென்றும் அதிலே இன்பஸ்தலமும் துன்பஸ்தலமும் உண்டென்றும் நம்பியிருந்தனர்கள். இன்பஸ்தலமானது வருணன், யமன் முதலானோர் இருப்பதும், பிதிர்க்கள் தேவர்களோடு இன்பம் சுகிக்கின்ற உலகமென்றும், துன்பஸ்தலமானது யாகஞ்செய்யாத பாவிகள் தள்ளப்படுகின்ற பெரும்பாதாளம் என்றும் அவர்கள் நம்பியிருந்தார்கள்.

இப்பொழுது இத்தேசத்தில் இந்தக் கொள்கையைச் சனங்கள் ஒருவாறாய் வேறுபடுத்தி ஜன்மம் என்னும் உபதேசத்தை அநுசரித்து வருகிறார்கள். ஆத்துமாவானது மரணகாலத்தில் உடலை விட்டு நீங்கும்பொழுது வேறொரு உடலிற் பிரவேசித்து மிருகமாகவும் தாவரமாகவும் இடைவிடாமற் பிறந்து தன் வினைப்பயனைத் தீர்த்துப் பின்பு ஏகசத்துவாகிய பிரம்மத்தில் ஐக்கியமாகி அழிந்துபோகும் என்பதே இவ்வுபதேசத்தின் சாரம். இது மிகவும் பயங்கரமான போதனை. இதனால் துன்பகாலத்திலும் துயரகாலத்திலும் ஆத்துமாவுக்கு யாதொரு திருப்தி கிடைக்காமற்போகிறது. அது அடையும் நற்பலன் என்ன? முன்னிருந்து இழந்த உடலை மறந்து உயர்ந்த ஒரு உடலிற் பிறப்பதே, ஆனால் உயர்ந்த உடலென்று தெரிந்தாலல்லவோ சந்தோஷம் உண்டாகும்? முன்னிருந்த உடலிலே தான் செய்த நல்வினையை நினைப்பதால்மாத்திரம் வரத்தக்க ஆனந்தமானது இந்த உபதேசத்தின்படிக்கு ஆத்துமாவுக்கு இல்லையே இல்லை. இனி எக்காலமும் கிடையாது. பிறப்பெல்லாம் ஒழிந்தபின் ஆத்மாவானது பிரம்மத்தில் ஒடுங்கிப் போகிறதே. அதுபோலவே அதன் துற்பலனும். தான் ஒரு உடலிற் பிறந்து அநுபவிக்கிற கஷ்டதசையின் காரணம் இன்னதீவினையென்று ஆத்துமாவுக்குத் தெரியாமையால், அந்தக் கஷ்டநஷ்டங்கள் அநியாயமும் அகோரமுமாகத் தோற்றுமே. தன் கடமையை நிறைவேற்றாமையினால் உண்டாகும் உள்ளான துயரம் இந்த உபதேசத்தை அநுசரிப்பவருக்கு இல்லை. ஆதலால் இவ்வுபதேசத்தால் மனிதர் நன்மையையாவது தீமையையாவது செய்யும்படிக்கு ஏவப்படுகிறதேயில்லை. வந்தது வரட்டும் செய்வதைச் செய்வோம் எல்லாம் ஊழ்வினை என்னும் இப்போதனை வேதோபதேசத்துக்குச் சுத்த மாறுபாடாயிருக்கிறது.

கிறிஸ்துவின் உபதேசங்களிலோ மறுமை என்பது சிரேஷ்ட போதனையாயிருக்கிறது. அவர் மனுஷருக்கிருந்த நம்பிக்கையை உறுதிப்படுத்தி, அதைச் சூழ்ந்திருந்த சந்தேக இருட்டை விலக்கி, உலகமெல்லாம் அதைத் துய்யமாய் நோக்கும்படி அதைத் துலக்கிவிட்டார். ஒவ்வொருவருடைய ஆத்துமாவும் மரணத்துக்குப்பின்புமோட்சத்திலாகிலும் நரகத்திலாகிலும் சீவித்திருக்

Heaven, where they shall enjoy pleasures for ever more; and those who disobey God and serve sin shall go to Hell where they shall suffer the punishment due to their disobedience. This is quite in harmony with our idea of justice and the way men treat each other. We honour the law-abiding and punish the law-breakers.

According to Christianity there is to be an end to this world, and then a Judgment day in which Christ shall publicly pronounce judgment upon all the inhabitants of the earth. All who die before that day shall be raised from the dead with purified bodies, and be reunited to their souls, and thus being reunited shall receive the award of their destiny. The godly shall go into everlasting bliss in Heaven, and the wicked into everlasting torment in Hell. Dear Reader, among which class will you be on that great Day?

...கும் என்று அதிகாரத்தோடு அறிவித்தார். மனோற்சாகமாய்க் கடவுளைச் சேவித்தவர்கள் மோட்சம்போய் நித்யானந்தம் அனுபவிப்பார்களென்றும், கடவுளுக்கடங்காமல் பாவத்தை நடப்பித்தவர்கள் நரகம்போய் தண்டனையடைவார்களென்றும் அவர் போதித்தார். இது உலகத்தில் வழங்கிவருகிற எல்லா தர்மத்துக்கும் நீதி நியாயத்துக்கும் சரியாயிருக்கிறது. சட்டத்தின்படி நடப்பவரை நாம் நன்குமதித்து, அதைக் கடப்பவரை நாம் தண்டித்துவருகிறோமே.

கிறிஸ்துமார்க்கத்தின் பிரகாரம் இந்த உலக வாழ்வு முடிந்து, சகல சனங்களுக்கும் கிறிஸ்து தீர்ப்பு சொல்லும் ஒரு நடுத்தீர்வை நாள் வரப்போகிறது. அந்த தினத்துக்குமுன் செத்தவர் எல்லாரும் சுத்தமாக்கப்பட்ட உடலோடு எழுப்பப்பட்டு ஆத்மதேகிகளாய்த் தங்கள் தங்கள் தீர்ப்பைப் பெற்றுக்கொள்வார்கள். பக்தர் எல்லாரும் மோட்சஞ்சேர்ந்து நித்திய ஆனந்தத்துக்குள் பிரவேசிக்கும்படியும், அவபக்தர் எல்லாரும் நரகத்திற்போய் நித்தியவேதனை அடையும்படிக்கும் தீர்ப்புப் பெறுவார்கள். இதை வாசிப்பவனே, அந்த மகா தினத்தில் நீ எந்த வகுப்பில் இருப்பாயோ?

## THE SAT-GURU.—சற்குரு.

ஒருநாள் பிரயாணி ஒருவன் அடர்ந்து படர்ந்த ஒரு காட்டின்வழியாய்ப் போகும்பொழுது திடீரென்று வழிதப்பிப்போனான். அனேகநாளாய் அவன் யாரையும் காணாமல், திக்குத்திசை தெரியாமல் அங்கும் இங்கும் அலைந்து திரிந்து தவித்துக்கொண்டிருந்தான். ஆனால் ஒருநாள் வேடன் ஒருவன் அந்தப் பிரயாணிக்கு எதிர்ப்பட்டு அவன் ஆபத்தைத் தெரிந்துகொண்டு அவனைப் பார்த்து, "ஐயா, நீர் வழிதப்பிப்போயிருக்கிறீர். என் பின்னே வந்தால் நீர் போகவேண்டிய பாதையை உமக்குக் காட்டுவேன்" என்றான். அவன் வாக்கும் அவன் சத்தமும் கொடிய ஆபத்திற்கிடந்த அந்த ஏழைப்பிரயாணிக்கு எத்தனை ஆனந்தத்தை உண்டாக்கியிருக்கும்! அவன் க்ஷணப்பொழுதும் தாமதியாமல் உடனே புறப்பட்டுச் சொல்லிமுடியாத சந்தோஷத்துடன் அந்த வேடனைத் தொடர்ந்தோடினான். இதிலே வழிதப்பிப்போனவனுடைய ஸ்திதி சற்குருவாகிய இயேசுகிறிஸ்து இவ்வுலகினில் உதித்தபொழுது மானிடர் இருந்த நிலைமைக்கும், தெய்வச்செயலாய்த் தென்பட்டு வழிகாட்டின வேடன், அம்மானிடரைக் கடவுளிடத்திற்கும் மோட்சத்துக்கும் நடத்தும்படி அவதரித்த பரமகுருவாகிய இயேசுகிறிஸ்துவுக்கும் நல்ல உபமானங்களாயிருக்கின்றன.

இயேசு இவ்வுலகினில் எழுந்தருளியபோது மானிடர் இருந்த நிலைமை என்னவென்று விசாரிப்போம். அப்பொழுது அவர்கள் பாவத்தில் அமிழ்ந்து வீண்பக்தியில் உழன்று, கடவுளை அறியாமல் அஞ்ஞான இருளிலே அலைந்துகொண்டிருந்தார்கள். கடவுளை அவர்கள் ஆகாயத்தில் தேடியும் சூரிய சந்திர நட்சத்திரங்களிலே அவரைக் காணவில்லை; பூமியிலும் அவர்கள் அவரைத் தேடியும், மலைகளிலும் குகைகளிலும், ஆற்றிலும் கடலிலும், கல்லிலும் செடியிலும், காட்டிலும் மேட்டிலும், பலவித பிராணிகளிலும் அவரைக் காணமற்போனார்கள். மனிதர் இப்படித் தேடித் தவிக்கிறதை இயேசு கண்டு மனதுருகி மானிடதேகம் பூண்டு உலகில் உதித்து மனிதரைப் பார்த்து, "நீங்கள் கடவுளைத் தேடுகிறீர்களே, என்னைப் பாருங்கள். கடவுளும் நானும் ஒன்றே. என்னைக் கண்டவன் கடவுளைக் கண்டவனாவான். நான் அவருடைய அச்சுருவான சாயலாயிருக்கிறேன். நான் பரிசுத்தனாயிருக்கிறதுபோலவே அவரும் பரிசுத்தர்; நான் அன்பு நிறைந்திருக்கிறதுபோலவே அவரும் அன்புள்ளவர்; நான் நீதிபரனாயிருக்கிறதுபோலவே அவரும் நீதிபரர். அவரை உங்களுக்கு வெளிப்படுத்தவே நான் வந்திருக்கிறேன்; நானே அவர்" என்றிப்படிக் கூறினார்.

அன்றியும், மனிதர் உலகமெங்கும் பாவபாரத்தைப் பொறுக்கமாட்டாமல் அதைத் தொலைத்துக்கொள்ளும்படி பலியிட்டு, யாத்திரைசெய்து, காவடி சுமந்து, தானமிட்டு, தபசுபுரிந்து பற்பலகாரியங்கள் செய்தும் யாதொரு பயன்பெறாமலும், பாவப்பழி நீங்காமலும் மனதுக்குத் திருப்தியடையாமலும் இருப்பதை இயேசு கண்டு பச்சாத்தாபப்பட்டு, அவர்கள் பாவபாரத்தைத் தம்மேல் ஏற்றுக்கொண்டு, "நானே உலகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவஆட்டுக்குட்டி. உங்களுக்குப் பதிலாக நான் என் உயிரைக் கொடுத்து உங்களை உங்கள் பாவப்பழியிலிருந்து விடுவிக்கிறேன். என்னை உங்கள் இரட்சகனாக ஏற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுதுதான் உங்கள் இளைப்பும் தவிப்புந்தீர்ந்து உங்களுக்குப் பூரணதிருப்தி உண்டாகும்" என்றறிவித்தார்.

இதுமாத்திரமல்ல, மனிதர் தங்கள் பரமதாப்பனைக் கண்டடையாமலும், மோட்சமார்க்கத்தைத் தெரிந்துகொள்ளாமலும் இருந்தார்கள். இந்த நிலைமையை இயேசு பார்த்துப் பரிதபித்து அவர்களிடம் சேர்ந்து, "நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன். என்னாலன்றி ஒருவனும் பிதாவண்டை வாரான். என்னைப் பின்செல்வீர்களானால் நான் உங்களைக் கடவுளிடத்திற்கும் மோட்சத்துக்கும் கொண்டுபோய்ச் சேர்ப்பேன்" என்றார். காட்டிலே வழிதப்பிப்போயிருந்தவன் வேடனைக் கண்டு களித்து நன்றியறிதலுடன் அவன் பின்னே போனதுபோலவே, எல்லா மனிதரும் கிறிஸ்துவைக் கண்டு அகமகிழ்ந்து அவரைத் தங்கள் சற்குருவாக அங்கிகரித்துக்கொள்வார்கள்.

இயேசு கிறிஸ்துவே சற்குரு. சற்குருவானவர் தேவனும் மனுஷனுமாயிருக்கவேண்டும். நம்முடைய குறைகளையும் குணங்களையும் அறிந்து நமக்கு உதவிபுரியும்பொருட்டு அவர் மனுஷனாகவும், கடவுளை நமக்கு வெளிப்படுத்தி, பாவத்தை வெறுக்கத்தக்க பலத்தை நமக்குத் தந்து, நம்மை மோட்சகரை சேர்ப்பிக்கும்பொருட்டு தேவனாகவும் இருக்கவேண்டும். தற்காலம் இந்துக்களுக்கு இயேசுவே தேவை. அவர்தான் பரமகுரு. அவரை அண்டியிராமையினால்தான் அவர்கள் கடவுளை அறியாமல் விக்கிரகங்களை வணங்கிவருகிறார்கள். கண்டதெல்லாம் தெய்வமென்று கையெடுத்துக் கும்பிட்டுவருகிறார்கள். சங்கராசாரியார் சொல்வதைக் கேளுங்கள்.

> சற்குருவை அறியாமல் உலகிலேதான்
> சண்டாளர் கல்லுகளைத் தெய்வமென்று
> பொய்க்குருக்கள் சொன்னபுத்தி தன்னைக்கேட்டுப்
> பூசைசெய்து கல்லுகளைப் போற்றிசெய்வார்
> சொற்குருக்கள் தங்களுடை சொல்லைக்கேட்டால்
> சொர்க்கமுண்டோ நரகமல்லால்; சொல்லும்போது
> சற்குருவை அறிந்தவருக் குடனேமோட்சம்
> சார்வதென்றே முன்னோர்கள் சாற்றினரே.

இத்தேசத்திலே குருக்கள் பலபேருண்டு; வாஸ்தவமே. ஆனால் அவர்களால் நமக்காவதென்ன? மெய்த்தேவனை அவர்கள் உங்களுக்குக் காட்டவில்லை. அவரை அவர்கள்தாமே அறியாதவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் குருடருக்கு வழிகாட்டும் குருடர்போலிருக்கிறார்கள். குருக்கள் எப்படியோ அப்படியே சீஷர்களும். பாவத்தை நிவிர்த்தி செய்யும் வழியையும் அவர்கள் தெரிவிக்கிறதில்லை; தங்கள் சொந்த பாரத்தையே அவர்கள் சுமக்கமாட்டாமல் தவிக்கிறார்கள். சனங்களைப்போலவே குருக்களும் பெரும்பாவிகளும் துரோகிகளுமாயிருக்கிறார்கள். அவர்களும் பூசாசாரிகளும் கள்குடித்து, அபின்தின்று தேவடியாள் வீட்டுக்குப் போகிறவர்கள் என்பது யாவருக்கும் தெரிந்த காரியம். திருப்பதி மஹந்துவாகிய பெரிய குருவானவன் கோவிலைச் சேர்ந்த 2 லட்சம் ரூபாயை அபகரித்துக்கொண்டு துன்மார்க்கமாய்ச் சீவனம் பண்ணி மூன்றுவருஷம் பண்ணெடுக்கத் தண்டிக்கப்பட்டதும் உங்களுக்குத் தெரிந்தவிஷயமே. அவன் பரிசுத்தனென்றும் பெரிய குருவென்றும் எண்ணியிருந்தீர்களே, இன்னும் அப்படி நினைக்கிறீர்களா? அவன் கொடிய வஞ்சகன் என்று கோர்ட்டிலே பகிரங்கமாக ருஜுவாயிற்றே. அவனைத் தண்டித்தது உத்தம காரியம் என்று உங்கள் பத்திரிகையிலேயே கூறியிருக்கிறது. அன்பர்களே, ஒரு பானைச்சோற்றுக்கு ஒருசோறு பதம். லோககுருக்கள் எல்லாம் பாவ குருக்களாயிருக்கிறார்கள். அவர்கள் உங்களை ஒருக்காலும் கடவுளிடம் சேர்ப்பிக்கக்கூடாது.

ஒருநாள் ஒரு கரடியும் அதின் குட்டிகளும் ஆற்றிலே விழுந்து நீரோட்டத்தில் அடித்துக்கொண்டு போகும்பொழுது அதை



ஒரு இடையன் பார்த்து ஆடுகள் என்று நினைத்துக்கொண்டு சலத்தில் பாய்ந்தானாம். பாய்ந்த இடையனைக் கரடி தெப்பம் என்று நினைத்துக்கொண்டு அவன் முதுகின்மேல் குதித்ததாம். குதிக்கவே இரண்டுபேரையும் வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டதாம். அதுபோல குருக்களும் சனங்களும் ஒருவரை ஒருவர் நம்பி மோசம்போகிறார்கள். பாவமாகிய வெள்ளமானது தங்களை வாரிக்கொண்டு போகிறதென்று இந்துக்கள் திகைத்துக் கிடக்கிறார்கள். குருக்கள்மார் லாபத்தைக் கருதித் தந்திரமந்திரங்களால் அவர்களை மயக்கி ஏமாற்றிவருகிறார்கள். பாவமோ பழையபடி பர்வதம்போல் பிரமாண்டமாகிறது. ஆதலால் அன்பர்களே இந்த வஞ்சக்குருக்களை விட்டோடுங்கள். சற்குருவைத்தேடி இயேசுவை ஏற்றுக்கொள்ளுங்கள். அவரை நம்பி, அவரைப் பின்சென்று, அவரை நேசித்து நடவுங்கள். அவர் உங்களை இரட்சித்து உங்கள் பாவங்களை மன்னித்து, உங்கள் மனதைமாற்றி உங்களுக்குப் பரிசுத்தமும் பாக்கியமும் அருளச் சித்தமாயிருக்கிறார்; நீங்கள் மோட்சம் சேர அவர் ஒருவரே உங்கள் துணைநாயகர்.

> வணங்குவாய் ஜகசோதி ஒருவனாகி
> மாநிலத்தை ஒருநொடியில் வகுத்தேமண்ணில்
> குணமான மனிதரையும் படைத்தபின்பு
> குவலயத்தில் தானுதித்துக் குருவாய்வந்து
> கனமான சமுசார மொன்றில்லாமல்
> சந்நியாசி போலிருந்து தவத்தைக்காட்டி
> அன்பான சித்தர்களை இருத்திப்பின்பு
> அகண்டதலம் சென்றவரை அண்டுவாயே.

## ANSWERS TO OBJECTIONS.—சந்தேக நிவிர்த்தி.

### "JEHOVAH'S IGNORANCE.—யெகோவாவினறியாமை."

இந்தத் தலைப்புப்பெற்ற யாழ்ப்பாணத்துப் பத்திரிகை ஒன்றிலே "ஆதாமும் ஏவாளும் பாவஞ்செய்தார்கள், அவர்களுடைய வமிசத்தில் பிறந்தகுற்றத்தால் நாமெல்லாரும் பாவிகள், கிறிஸ்துவை நம்பினால் அப்பாவம் நீங்கும், நம்பாவிட்டால் நித்திய நரகத்துக்கு ஆளாவோம் என்னும் இவ்வளவுமே கிறிஸ்து மதசாரம். நானூறு ஐந்நூறாகப் பின்னப்பட்ட வெவ்வேறு கோட்பாடுடைய கிறிஸ்தவரெல்லாருக்கும், கிறிஸ்துவை நம்பாதவர்களுக்கு நரகமே கதி என்பது ஒத்த துணிபாயிருக்கின்றது" என்று கூறியிருக்கிறது. இதை ஆதாரமாக வைத்துக்கொண்டு இதற்கு விரோதமாக எட்டு நியாயங்கள் கூறி "ஆராயும்போது இவ்வளவு அறியாமையுடையராய் விளங்கும்யெகோவாவுக்குப் போதிய கல்வியும் விவேகமுமுடைய மனிதர் ஆட்படும்படி போக எண்ணுதல் என்னவெட்கம். சீச்சீ! இஃதென்ன, மானமழியா துயிர்விடுகை சாலவுறு மன்றோ" என்று முடிவுரையாய்க் கூறியுமிருக்கிறது.

இந்தச் சஞ்சிகையிலே "கிறிஸ்தமத சாரமாகக்" கூறியுள்ளது மெய்யோ பொய்யோ என்பதைமாத்திரம் விசாரித்து, இதைப் பொய் என்று திருட்டாந்தப்படுத்திப் பின்வரும் சஞ்சிகையிலே மேற்படி நியாயங்களிலடங்கிய ஆபாசங்களை எடுத்துரைத்து எமதன்பர்களின் சந்தேகங்களையும் தவறுகளையும் நிவிர்த்திக்க முயலுவோம்.

மேற்படி பத்திரிகையிலே "கிறிஸ்துமத சாரமாகக்" கூறி இருக்கிறது, எதிரியை வெல்ல வேண்டுமென்றிருக்கும் ஒருவன் எதிரியைப்போல வைக்கோற் பதுமை ஒன்று செய்துகொண்டு அதைத் தீயாற் கொளுத்திவிட்டு எதிரியைப் போரில் வென்றுவிட்டேன் என்று அலுப்புகிறதற் கொப்பாயிருக்கிறது. யாதொரு சமயத்தின் சாரத்தை அறியவேண்டுமாயின் அதின் வேத வாக்கியங்களையாகிலும், அவ்வேதத்திலிருந்து உண்டாயிருக்கும் வேத சாஸ்திரத்தையானாலும், அதின் பிரதம போதக நிபுணரின் சொற்களையானாலும், ஆதாரமாக எடுத்துரைப்பதே நியாயம். மற்றப்படி ஒருவன் ஒருமதத்தைக் குறித்துத் தான் தன் சிற்றறிவால் எண்ணியதை அதின் சாரமாகக் கூறுவது நரிவாலைப் பிடித்துக்கொண்டு கடலாழம் பார்த்த கதையாகிறது. இன்ன மந்திரி, இன்ன கவர்னர் இன்னவின்ன அபிப்பிராயங்கள் உடையவர் என்று சொல்லத் துணிகிறவன் சுயேச்சையாய் மனோராச்சியம் பண்ணாமல் அவரவர் எழுதி அல்லது பேசியிருப்பதை ஆதாரமாகக் கூறுவான். இதுவே சரியானமுறை. மற்ற எதையும் புத்திமான்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். "கிறிஸ்துமத சாரமாக" இப்பத்திரிகையில் கூறியிருப்பதைச் சொன்னதார்? எழுதினதார்? கிறிஸ்துமத நூலில் எந்தக் கிரந்தத்தில் எந்த அத்தியாயத்தில் இது கண்டிருக்கிறது? அங்கொருவார்த்தை இங்கொருவார்த்தை பொறுக்கிக்கொண்டு தென்னாலுராமன் சித்திரமெழுதினாற்போல் "மற்றதெங்கே என்றால்," "அந்தப்பக்கம் இருக்கிறது" என்று சொன்னதுபோல் சிலதை மறைத்துச் சிலதைக் குறைத்துச் சிலதை மாற்றிச் சிற்றுருச்செய்து "இவ்வளவுமே கிறிஸ்துமத சாரம்" என்று கூறுவது சுத்த பிசகு. இந்தச் சாராம்ஸத் தொகுப்பைக் கண்டெழுதினவருக்கு 'பாவம்' இன்னதென்றும், அது "நீங்குவது" இன்னதென்றும், 'நம்புகிறது' இன்னதென்றும், தெரியுமா? இந்தப் பதங்கட்குப் பயன் கூறுவாரா? இந்தப் பதங்கள் கிறிஸ்துமதத்தில் எவ்வாறு உபயோகிக்கப்பட்டிருக்கின்றனவென்று அதின் நூலை ஆராய்ச்சி செய்திருக்கிறாரா? தமக்கே அர்த்தம் விளங்காத சில வார்த்தைகளைக் கூட்டி "கிறிஸ்துமத சாரம் இவ்வளவுமே" என்று உளறுவது சிறுபிள்ளைகள் மணற்சோறு சமைத்து அதை உண்ணப்போகும் விளையாட்டாயிருக்கிறது.

"ஆதாமும் ஏவாளும் பாவம் செய்தார்கள், அவர்களுடைய வமிசத்திற் பிறந்த குற்றத்தால் நாமெல்லாரும் பாவிகள்" என்றால் ஆதாம் ஏவாளின் வமிசத்தில் பிறந்தமையால் மாத்திரம் நாம் பாவிகள், மற்றப்படி அல்ல என்றுபொருள் படுகின்றதே. ஆதாம் ஏவாள் என்னும் ஆதி மனுஷரின் கதையை நம்பாத இந்துக்கள் முதலானோர் பாவிகளாகாரே. பத்திரகாசிரியர் என்ன சொல்லுவார். இந்துக்கள் பாவிகளா அல்லவா? பாவிகள் அல்லவென்றால் தமது சொந்த மதத்துக்கும் அதின் கோட்பாடுகளுக்கும் விரோதமாய்ச் சாதிக்கிறவராவார். இந்து மதம் முழுவதும் பாவத்தைத் தீர்க்கும்படியான ஆசாரங்கள் முதலான கணக்கு வழக்கில்லாத ஏற்பாடுகள் நிறைந்திருக்கிறதே. பிரதிதினமும் பிராமணர் செபிக்கவேண்டிய ஜெபம் என்ன? "ஐயையோ நான் பாவமுள்ளவன். என் நடத்தை எல்லாம் பாவ சம்பந்தமாய் இருக்கிறது. என் ஆத்துமாவும் பாவ ரூபமாய் இருக்கிறது. பாவத்தோடே பிறந்தவனுமாய் இருக்கிறேன். அடைக்கலம் புகுந்தவர்களுக்குத் தயவாய் இருக்கிற கடவுளே, நீரே உம்முடைய கிருபையினாலே என்னை இரட்சியும்," என்று கடவுளைப் பார்த்து வேண்டிக்கொள்ளுகிறார்களே. இந்துக்கள் தங்களைப் பாவிகள் என்று ஒப்புக்கொள்ளுகிறதற்கு இது ஒன்றுமே போதும். தற்காலத்தில் இந்துக்கள் பெரும்பாலும் இந்தப் பெரும் சத்தியத்தை மறந்து பாவம் என்கிறதில்லையென்றும், தாங்கள் பாவிகள் அல்லவென்றும் சாதித்து, கிறிஸ்தவர்கள் தங்களையும் மற்றவர்களையும் "பாவிகள்" என்று பொய்யாய் அவதூறு செய்கிறார்கள் என்பது தங்கள் சொந்த மதத்துக்கும் மானத்துக்கும் பங்கமாயிருக்கிறது. அப்பேர்ப்பட்டவர்கள் நாஸ்திகராய் இருந்தால் உத்தமமாயிருக்கும். இந்து மதமெல்லாம் ஆதி தொடங்கிப் பாவ வினையை எவ்வாறாயினும் நிவிர்த்திக்கும்படி இத்தேசத்தார் செய்துவரும் முயற்சியாயிருக்கிறதே.

ஆனால் பத்திரகாசிரியர் தாமும் தம்மவரும் பாவிகள் என்று ஒப்புக்கொண்டால், பாவம் உலகத்தில் உண்டான காரணத்தை விசாரிப்பானேன்? தாம் அதை அறியாமற்போனால் அதை அறிவிக்கும் கிறிஸ்துமதத்தைப் பழிப்பானேன், கிறிஸ்துமதம் கூறும் காரணத்தைப்பார்க்கிலும் சிறந்ததும் நம்பத்தக்கதுமானவொரு காரணத்தை எமதன்பர் கண்டு அறியும்வரைக்கும் பொறுத்திருப்பதே உத்தமம். அன்றியும், பாவமானது உலகத்தில் பிரவேசித்த காரணத்தை அறிவது அவசியமேயன்று. பாவம் உண்டென்று ஒப்புக்கொண்டு அதை நீக்க முயல்வதே விசேஷம். நோயாளியானவன் தன்னை அனுதினமும் அலட்டி வாதித்து அகாலமரணத்துக்கு இழுத்துக்கொண்டுபோகிற தன் வியாதியை நீக்கிக்கொள்ள வகைபாராமல் அதின் காரணத்தை அறிய விரும்பி வைத்தியனோடு வீண் போராட்டம் பண்ணிக் காலம் கழித்துவருவானானால் அவன் பெருமூடன் என்று விசதமாகும். அப்படியே பாவ விஷயத்திலும். அது வந்த வழியை அறிவதைவிட அது போகும் வழியை அறிவதே உத்தமம். நம்மை ஆட்கொண்டிருக்கும் பாவத்தை நாம் முற்றிலும் செயித்துத் தொலைத்துக்கொண்டபின்பு, வேண்டுமானால் நாமும் பத்திரிகாசிரியர் முதலானோரும் சௌக்கியமாய் உட்கார்ந்து பாவம் மனிதரிடம் பிறந்த வகையை விசாரித்துக் கொள்வோம். இப்பொழுதோ இது நம்முடைய தொழில் அல்ல.

(இன்னும் வரும்.)

## NEWS AND NOTES.—வர்த்தமானக்குறிப்புகள்.

**சென்னை மிஷன்கள்.**—சென்னையைச்சேர்ந்த ஒரு மிஷனில் மாத்திரம் சென்ற வருஷம் 200 பேர் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

**பம்பாயில் நடந்த காங்கிரேஸ் சபை.**—இதற்கு 5,000 பேர் போயிருந்தார்கள். வருகிறதடவை கல்கத்தாவிலே சபை கூடும்படியாகத் தீர்மானித்திருக்கிறது.

**விஷப்பல்லி.** — பல்லிகளிலும் விஷமுள்ளவை சில உண்டு. அவற்றின் பல்பட்ட தவளை, எலி, புறா, முயல் முதலிய செந்துக்கள் உடனே உயிர்விடுகின்றனவாம்.

**விஜய நகா சமஸ்தானம்.**—இந்தச் சமஸ்தானத்தில் கிழவர்கள் சிறுபெண்களுக்குப் பரியம்கொடுத்து விவாகம்பண்ணலாகாது என்று மகாராஜாவானவர் எச்சரித்திருக்கிறார்.

**சத்தியவேதம்.** — உலகத்தின் குடிகளிலே பத்திலொன்பது பாகத்தாரின் பாஷைகளில் சத்தியவேதமானது இப்பொழுது மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

**பாதிரிமார்.**—அஞ்ஞான தேசங்களிலே கிறிஸ்துவைப் பிரசங்கித்துவரும் பாதிரிமாரின் தொகை 6,700. இவர்களில் பெண்பாலாரின் தொகை 2,700.

**நகரவிர்த்தி.**—அமெரிக்காவிலிருக்கும் நியூயார்க்கு என்னும் பட்டணத்திலே போன வருஷத்தில் 5084 புது கட்டடங்கள் கட்டப்பட்டனவாம்.

**மலையாளத்தரசர்.** — சென்றமாதம் காசிக்கு யாத்திரை போன மலயாளத்தரசரவர்கள் வழியிலே சென்னையில் சிலநாள் தங்கிப்போனார். புதுக்கோட்டை ராஜாவும் சிலகாலமாய்ப் பட்டணத்திலிறங்கியிருக்கிறார்.

**இரட்சண்ய சேனை.**—இந்தச் சங்கத்தாருக்கு உலகத்திலே 2,767 சேனைகளும் 8,700 தளகர்த்தரும் உண்டு. வருஷந்தோறும் கற்பிழந்த ஈராயிரம் பெண்கள் சீர்ப்படுவது அவர்கள் பிரயாசையின் ஒருபலனும்.

**கிலாட்ஸ்டன் மந்திரி.**—உலகமெங்கும் பேர்போன மந்திரியாகிய கிலாட்ஸ்டன் என்பவருக்கு 80 வயதானபோது இஷ்டசனபந்துக்கள் முதலானோர் அவருக்கு அனுப்பிய கடிதங்களின் தொகை மூவாயிரமாம். இராணிக்கும் இவ்வளவு கீர்த்தி சம்பத்துக்கிடையாது.

**இந்தியாவின் மதங்கள்.**—இத்தேசத்திலே 18 கோடி 80 லட்சம் இந்துக்களும், 55 லட்சம் பௌத்தரும், 5 கோடி 31 லட்சம் மகமதியரும், 20 லட்சம் கிறிஸ்தவர்களும், 85 ஆயிரம் பார்சிகளும், 12 ஆயிரம் யூதர்களும், 54 லட்சம் மதமில்லாதவர்களும் உண்டு.

**நெல்லூர் குண்டூர் ரெயில்வே.**—நெல்லூரிலிருந்து குண்டூர் வரையும் ரெயில்வே போகும்படிக்கான ஏற்பாடுகள் செய்யும்படிக்கு கவர்ன்மெண்டார் சில எஞ்சினியர்களை அனுப்பியிருக்கிறார்கள். வெகு சீக்கிரத்தில் இத்தேசம் இருப்புப் பாதைகளாலான ஒரு பெரிய வலையாய்விடும்போலிருக்கிறது.

**தேங்காயெண்ணெய்.** — தேங்காயெண்ணெயிலிருந்து ஒரு ஜர்மன் டாக்டர் ருசிகரமான வெண்ணெய் உண்டுபண்ணுகிறார். பாலிலிருந்தெடுக்கிற வெண்ணெய்க்கும் இதற்கும் யாதொரு பேதம் இல்லாமற்போனாலும், இந்தப் புது வெண்ணெய் சுத்தமும், நயமும், லேசாய் சீரணிக்கத்தக்கதுமாயிருக்கிறதாம்.

**ராச்சியங்கள் செல்வம்.**—நத்தம் ஐஸ்வரியத்தின்படிக்கு ராச்சியங்கள் பின்வருமாறு ஒழுங்கு செய்யப்பட்டிருக்கின்றன. இங்கிலிஷ் ராச்சியம் தலை ஒன்றுக்கு 270 ரூ; பிரான்சு 190 ரூ; யுனைட்டெட் ஸ்டெய்ட்ஸ் 160 ரூ; ஆஸ்திரேலியா 400 ரூ; ருஷியா 60 ரூ; ஆஸ்திரியா 60 ரூ; ஜர்மனி 50 ரூ; இந்தியா, சீனா, இத்தலி ஒவ்வொன்றும் 40 ரூ.

**துலுக்குப் பாதிரி.**—பம்பாயிலிருந்து ஒரு துலுக்குப் பாதிரியார் சீர்மைக்குப்போய் இஸ்லா மார்க்கத்தைக்குறித்துப் பிரசங்கம்பண்ணப்போகிறாராம். அப்படியே சில இந்துக்களும் அவ்விடம் போய் விக்கிரகாராதனை முதலியவற்றின் நற்பயனைக்குறித்துப் பிரசங்கம்பண்ணத் தொடங்கினால் நலமாயிருக்கும்.

**சுத்தவீரம்.**—சென்னையிலே இந்து என்னும் பத்திரிகையின் பத்திராதிபரான ஜீ. சுப்பிரமணியரவர்கள் விதவையான தமது மகளை ஒரு பிராமணனுக்குப் பஹிரங்கமாய் விவாகஞ்செய்துகொடுத்தார். இதுவே சுத்தவீரம், தீமைவரும் என்று பயந்து நல்லதைச் செய்யாமல் தீயதைச் செய்வதே இத்தேசத்தாரின் பெருங்குறை.

**கிடங்குத்தெருக் கலகம்.**—இந்தக் கலகவிசாரணை எத்தனையோ மாதங்களாய் நடந்துவந்து கடைசியில் சென்றமாதத்தில் தீர்ப்புப்பெற்றது. கலகக் கர்த்தாக்களில் அநேகருக்கு மூன்றுமாதக் கடுஞ்சிறையும் நூறு ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. சிலருக்குக் குறைந்ததண்டனை செய்யப்பட்டது. சிலபேர் தப்பித்துக்கொண்டார்கள்.

**பூனையும் புலியும்.** — ஆப்பிரிக்காவில் ஒரு நாட்டைக் குறித்து இங்கிலாந்துக்கும் போர்த்துகல்லுக்கும் சிறிது காலமாய் வழக்குத் தொடர்ந்திருக்கிறது. புலிபோன்ற இங்கிலாந்தைப் பூனைபோன்ற போர்த்துகல் தன்வலியும் மாற்றான்வலியும் தூக்கிநோக்காமல் எதிரிடப் பிரயத்தனப்படுகின்றது. நியாயமும் இங்கிலிஷ்காரர் பட்சமே. எப்படி முடியுமோ, தெரியாது.

**உத்தியோக விவரம்.** — கல்விக்கடுத்த உத்தியோகங்கள் இந்தியாவிலே மாத்திரமல்ல, இங்கிலாந்திலும் வரவர வரவில் குறைபட்டுப்போகிறதாம். பிதாக்கள் ஆயிரம் ரூபாய்க்காகப் பட்ட கஷ்டத்தைப் பிள்ளைகள் பட்டாலும் ஐந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறது வெகு அருமையாம். உத்தியோகம் தேடுகிறதை விடக் கைத்தொழில், வியாபாரம் முதலியதுகளை நாடுவது நலமாகத் தோன்றுகின்றது.

**தஞ்சையிலோர் விந்தை.**—ரா பாஹதூர் சுப்பிரமணியர் அவர்கள் தஞ்சையிலே போரடிக்கிற ஒரு யந்திரத்தை ஸ்தாபிக்கப்போகிறார். இதனால் நெல் வேறு வைக்கோல் வேறாகிறதுமல்லாமல், உமி வேறு மணிவேறாகி அரிசியின் கொழியல் நீங்கிச் சுத்தமாகும். தொழில் விரைவாயும் அதிகமாயும் நடக்கும். இதுபோல் வேறு அனேக சீமான்களும் செய்துவந்தால் அரிசி நயக்கிறதுமன்றிச் சனங்களுக்கும் அதிக பிரயோஜனம் உண்டாகும்.

**நெருப்பால் இறந்தது.**—சென்னையிலே 19 வயதுள்ள ஒரு பெண் தான் பிடித்திருந்த விளக்கை விட்டுவிடவே அதனால் தன் வஸ்திரத்தில் தீப்பற்றிக் கொடிய வேதனைப்பட்டு இறந்துபோனாள். இப்பேர்ப்பட்ட சமயங்களில் தைரியமும் தெளிந்தபுத்தியும் இல்லாமையால்தான் பிராணபாயம் நேரிடுகிறது. இலேசாய் அணைத்துவிடத்தக்க சிறுநெருப்பைப் பேதையர்கள் அங்கும் இங்கும் ஓடி ஆடிக் குதிப்பதினால் பலங்கொண்டெரியும்படி மூட்டிவிடுகிறார்கள்.

**பொன்செய்தல்.**—இத்தேசத்திலே பொன்செய்யும் தொழில் வெகுநாளாய் நடந்தேறியிருக்கிறது. ஆனால் அதை யாரும் நம்புகிறதில்லை. சீர்மையில் ஒருவர் பித்தளைபோன்ற ஒரு லோகத்தைச் சுத்தபொன்னாக மாற்றிவருகிறாராம். அனேக வித்வான்கள் அதைப் பரிசோதித்து அதை வெட்டி, உறைகல்லில் உறைத்து, நெருப்பில் உருக்கி, திராவகங்கள் கொண்டதைப் பலவிதமாய்ச் சோதித்தும் அது பொன்னாகவே இருக்கிறதாம். இது விந்தையிலும் விந்தையாயிருக்கிறது.

**மாணாக்கர் விவரம்.**—இத்தேசத்தில் பள்ளிக்கூடத்துக்குப் போகிற ஆண்பிள்ளைகளின் தொகை 32 லட்சம்; பெண்களின் தொகை 3 லட்சம்; இரண்டுதொகைக்கும் பேதம் பெரிது. கிறிஸ்தவர் குடும்பங்களில் ஆண் பெண் இரண்டும் பள்ளிக்கூடம் போகவேண்டும். தாய்மார் படித்துத் தேறினவர்களாயிருந்தால் குடும்பக்ஷேமமும் தேசவிர்த்தியும் அநுகூலப்படும். மனையாள் படிக்கவும் பாடவும் எழுதவும் எண்ணவும் கூடுமானால் நாயகன் பிறர்முகம் பாரான், தன் வீடே அவனுக்கு கதியாயிருக்கும்.

**திருப்பதி மஹந்து.**—இவர்பேரில் வெகுகாலமாய்த் தொடுத்திருந்த வியாச்சியம் சென்ற மாதம் முடிந்து, இவருக்கு மூன்றுவருஷக் கடுஞ்சிறை விதிக்கப்பட்டது. இது நியாயமான தீர்ப்பு என்று "ஹிந்து" என்கிற ஓர் இந்துப்பத்திரிகை கூறுகின்றது. சனங்களுக்குக் கண்தெரியாமையால் அவர்கள் இதை நியாயமாக ஒப்புக்கொள்ளார்கள். தூர்த்தரையும் துன்மார்க்கரையும் தெய்வமாகக் கொண்டாடுகிறவர்கள் கோவிற்பொருளைக் கொள்ளைகொண்டு போனவனைச் சன்மார்க்கனென்று நினைப்பது கடினமல்லவே. ஆனால் ஒன்று: இனி தர்மகர்த்தாக்கள் முதலானவர்கள் வெகு சாக்கிரதையாயிருப்பார்கள்.

மாதாந்திரப்பத்திரிகை: இதன் விலை 1 பை: 25 பிரதிகள் 2 அணா.
**Vol. III.** No. 5. மார்ச்சுமீ, 1890.

To be had of Mr. A. T. Scott, Tract Depôt, Madras, at Re. 1 per 200 Copies. Postage extra.

Printed at the S. P. C. K. Press, Vepery. 1890.

